உ

கணபதிதுணை.

# ஸ்ரீ நடனகணபதிமாலையும்,

## ஸ்ரீ நடனகணபதி

## துதி பஞ்சகமும்.




இவை,

அருப்புக்கோட்டை,

ஸ்ரீ சுப்ரமண்ய ஞான தேசிகரது

சிஷ்யருள் ஒருவராகிய

ஸ்ரீ பிரகாசாநந்த சுவாமிகளால்,

இயற்றப் பெற்று,


சென்னை,

தருமசீலன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கலுற்றன.

1021

1921

ஸ்ரீ நடனகணபதிதுணை.

பெரிய சான்றோர்களது திருச்சபைகளால் நிரம்பிப் பவித்திரமான தொண்டை மண்டலத்தினுள் சிரேஷ்ட மிக்கதும் சைவ வியல்பும் வைணவ வியல்பும் சிறந்தது மாகிய காஞ்சியம்பதியின் தென்பக்கத்திலுள்ள வேகவதி நதியின் தீரத்தில், சித்த மூர்த்தியும் பிரம்மானுபூதிச் செல்வரும் தெலுங்கு பாஷையில் உலகம் உய்யும் பொருட்டு மதுரமான பத்யங்களைச் செய்தவருமான ஸ்ரீ வேமன்ன யோகிஸ்வராது பரம்பரையைச் சார்ந்த மாத்தூர்ச் சுவாமிகள் என்று வழங்கப் பெற்ற ஸ்ரீசிவராம சுவாமிகளால், இப்புண்ணியத் தலத்தில் சிவபெருமானுடைய திருவருளைப் பெற்ற மெய் யன்பர்கள்வந்து தங்குவதற்கும் மகேஸ்வர பூசை முதலியன செய்வித்தற்கும் யோக்கிய மாகத் திருமட மொன்று கட்டு வித்து ஸ்ரீ நடனகணபதி பிரதிஷ்டையும் செய்விக்கப் பெற்றுள்ளது. அவண் தரிசன நிமித்தம் வந்த அருப்புக் கோட்டை ஸ்ரீ சுப்ரமண்ய ஞானதேசிகரது சிஷ்யர்களுள் ஒருவராகிய ஸ்ரீ பிரகாசானந்த சுவாமிகளை ஸ்ரீ நடன கணபதி மீது தோத்திரஞ் செய்யுமாறு அன்பர்கள் பலர் கேட்டுக் கொள்ள அவர் ஸ்ரீ நடன கணபதி பஞ்சகம் செய்து கொடுத்தனர். பின்னரும் அவர்கள் நூறு செய்யுட்களால் நடன கணபதி மாலையொன்றை யியற்றிக் கொடுக்கவேண்டுமென் றுரைக்க அவர் அதனையும் அவ்வாறே யியற்றி இரண்டையுஞ் சேர்த்துத் தர அடியாரிடத்தில் மெய்யன் புடைய விழுப்புரந் தாலுகா ராதாபுரம் லக்ஷிமி நாராயண ரெட்டியாராலும் அப்பாஜி ரெட்டியாராலும் செய்யப்பட்ட பொருளுதவியைப் பெற்று இவை அச்சிடப்பட்டுச் சாதுக்களுக்கு விநியோகஞ்செய்யப்பட்டன.

ஆ. பாலசுந்தர முதலியார்,

காஞ்சிபுரம்.

சிதம்பரம் செந்தமிழ்ச் சங்கநிர்வாகரும் காஞ்சிபுரம்
பச்சையப்பன் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதருமான
ஸ்ரீ ஏகாம்பர ஐயரவர்கள்
இயற்றியது.

உலக முவப்ப கலைதிரு முறைபோ
னம்மைக மாகழி யதுநின மன்பாற்
சேவடி பரவ மாவடி யதனி
லருளுருக் கொண்டே யண்ணலா ரமர்தரு
கச்சிமா நகரி லுச்சியா மெனக்கொள்
பிள்ளையார் பாளைய மென்னப் பெயர்புனை
கல்விட மதனில் கலைதிரு வேக
வதிவெனும் புண்ணிய வரநதிக் கரையி
லடியர் குழாங்க ளுறுதின மெய்திப்
பவப்பிணி களைந்து பரிசோ யொரீஇத்
தலப்பய னெய்தித் தாழுயர் தாவே
யேமன்ன ரென்ன நாமம் புனைந்த
சா[illegible]ன் மாபினிற் றுழுதித் தருளிக்
கருணையும் பொறையுந் தருமமு மறிவும்
நீங்க லின்றி நிறைகுணச் செம்மல்
சிவராம சுவாமி யெனுநாம முடையோர்
மாத்தூர்ச் சுவாமி மடமெனும் பெயரா
லேத்தி யுலக ரின்றுந் துதிக்க
வளம்பொலி மாமடம் வகுத்தன ரதன்கண்
இடர்களைந் தென்று மிலங்கிவீற் றிருக்கும்
கடனகண பதியா நாயக மணியி
னன்பார் திருவடிக் கார்ந்தபா மாலையொன்
றின்பா லியற்றி யாவரு மேத்த
[illegible] டையமர்க்கரு ளளிக்குக்
[illegible] சுப்பிர மணியக்
குரவ னடி[illegible]ச் சிரமிசை புனைந்த
கற்றலுங் கேட்டலுங் கடனெனக் கொண்ட
பிரகா சாநந்தப் பெரியோன்
சூட்டினன் சூட்டினன் சூட்டின னுவந்தே.



உ

கணபதி துணை.

# ஸ்ரீ நடனகணபதிமாலை.

---

காப்பு.

சீருலவுங் காஞ்சிநகர்ச் செல்வப் பதிதனிலே
யேருலவு மன்பருப்ப வின்னடஞ்செய்-தாருலவு
வல்ல கணபதிநின் வாகணிபா மாலைசெய்ய
நல்ல வருளெனக்கு நல்கு.

உலகுறு மெல்லாச் சத்தங்கள் தமக்கிங்
கொளிருநிற் பதங்களே பதமாய்
நிலவுறு தலினு லித்துதி யமல
நினதடி யுறுமென நினைந்தேன்
கலனணி காமக் கண்ணிபா முமையாள்
களித்தருள் காஞ்சியம் பதியி
லிலகுறு மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
யிசைநடம் புரிகண பதியே. (க)

அற்பமு நினது செயலலா தசையா
வாதலி னுனைத்துதி புரிதல்
பொற்புறு முனது லீலையே யலதோர்
பொருளினைப் புகலுமா றுளதோ
நற்பய னுலகர்க் களித்திட வுலக
நடனசாலையினிலங் கொளிராம்
அற்புதமிகவே யணிகுழ லுமைக்கிங்
கருணடம் புரிகண பதியே. (உ)

உத்தமமினது திருவடி யுறவென்
னுளமதி னிருவிநின் னருளார்
பத்தியாற் றொழுநிங் கனுதின முனது
பதவொளி பாடுமா றருள்வாய்
வித்தக காஞ்சி நகர்தனி லுறைவோய்
விளங்குமெய் யடியவ ருளமாம்
புத்தல ரலர்க்கு மருணநல் லமரர்
புகழ்நடம் புரிகண பதியே. (௩)

நாரணன் வடிவா யுலகினுக் கருளி
நான்முகன் வடிவொடு படைத்துப்
பூரண வுருவா முருத்திரன் வடிவாற்
பொன்றலைவத் துளமலைந் தோடி
யோரொரு வுருவா யுலவுநின் பெருமை
யுரைப்பதற் கொண்ணுமோ வுரையாய்
வாரண முகத்தெம் வள்ளலே யருள
மணிநடம் புரிகண பதியே. (௪)

பலவித மாகத் தோன்றிடு முலகம்
பாமரு மிருக்குமுன் றனையே
நலமுறு மூல காரண மெனவே
நாட்டிய வதிசய மறியேன்
கலகமாய் முடியுமதவழி நடந்துங்
கருணையில் தொழில்களே புரிந்தும்
விலகுறா முளத்த ரறிவதற் கரிய
விரிநடம் புரிகண பதியே. (௫)

வெண்டிரு நீறு மக்கமா மணியும்
விளையறு முனதடி பரவுந்
தொண்டரின் கூட்டு முனதருட் பொலிவுந்
துறவுநன் னிலையுமுன் றனது
தொண்டனு மெனக்குக் குறைவற வுதவிச்
சுகவுரு வடையுமா றருள்வாய்
அண்டர்கள் பரவுங் காஞ்சியம் பதியி
லணிநடம் புரிகண பதியே. (௬)

உண்மையாய் நாளும் யோகிபோல் மலைமே
லோடியு நரிபதி கடந்தும்
வெண்மையி விரவி லுறங்குரு திருந்து
மெய்வளர் தாபமே புரிந்தும்
இன்மையா யுலவு மெனக்கரு ணிலைதான்
தெளிவுறு திருந்தவா றென்னே
வண்மையா லோங்கி வளருங்காஞ் சியினில்
வரநடம் புரிகண பதியே. (எ)

உதகமில் செடிக ளுலர்வுறு மதுபோ
லுனதரு ளுதவிடா திருக்கின்
விதமிகும் பவத்தி லுழல்குவ னீதான்
விரைகழற் பணிபவர்க் குரித்தோ
சிதருமு தலரு மலரினின் றெழுகுஞ்
செம்மது வுவட்டெடுத் தோடி
நதிபுக வணங்க ணிறையுங்காஞ் சியினில்
நனிநடம் புரிகண பதியே. (அ)

கறங்கெனச் சுழன்று பெரும்புறக் கடலுங்
கடந்திடு மொருகண மதிலே
திறங்கொளு முளத்தாற் சலிப்பறு முனது
திருவுரு மருவுமா றென்னே
மறமறக் கற்றோர் தங்கள தகத்தே
மருவிய திருமணி விளக்கே
பொறிகளை விளக்கி யொளிர்ந்திடு மமல
புகழ்நடம் புரிகண பதியே. (௯)

தந்தையாய்த் தாயாய்ப் பாலமு தூட்டித்
தனிவளர்த் தெனையக லாது
சந்தத முனது தொழும்பரு ளிருத்துந்
தகைமையா லெனதுயிர்த் துணையே
சிந்தெனக் கருணை பொழிமுகத் திறைவ
செறிமய லகற்றுநல் லுருவ
நந்தவில் மாத்தூர்ச் சாமிதம் மடத்தில்
நனிநடம் புரிகண பதியே. (௧௦)

காலினை யுதைத்த கறைக்கள னீன்ற
கருணைமா கடலென நினையே
சாலவந் தடைந்த வடியன்மீ துனது
தண்ணருள் செலுத்திவாழ்விப்பாய்
வலவார் குழலிக் கொழுநன்ற னுளத்தே
யெழுதினைத் தகமகி ழழகா
ஞாலமா லங்கள் கடந்தொளிர் தில்லை
நனிநடம் புரிகண பதியே. (கக)

எங்குநீ நிறைவுற் றின்பமே வடிவா
யிலகவு மிரிதரு மாயா
கங்குலிற் படுத்தென் னறிவெலாஞ் சிதறிக்
காலத்தை வீண்கழிக் கின்றேன்
பொங்குவெள் ளமுதம் பாலிரு கரையிற்
பொன்மலி பொழின்மிகு மேவகந்
தங்குநன் னதியின் வளங்கொள்காஞ் சியினில்
தனிநடம் புரிகண பதியே. (கஉ)

பாங்கொளிர் சடைமே லணிசெய முகுடம்
பனிமதி யொளிர்ந்திடு முனது
சிரந்தயங் கொருமே ருவினைநின் னலமுஞ்
சிறிதென மிளிருகின் றதகோ
வரந்தரு மைந்து புயத்திலும் பணிக
ளொளிர்ந்திடத் தகதக வெனவே
புரந்தரன் முதல வமரர்க டொகுதி
புகழ்நடம் புரிகண பதியே. (கங)

வயங்குறு மண்டக் குவவுக ளொருங்கென்
வாய்க்குளே யெனவுமை தனக்குத்
தியக்கறக் காட்டுங் கோலமே யடியேன்
றெரிசனை செய்யுமா றருள்வாய்
வியப்புறும் பெரிய விராட்டெனும் வடிவால்
விளங்கிய மடியவர்க் கெளிதாய்
நயப்புறு மாத்தூர்ச் சாமிதம் மடத்தில்
நனிநடம் புரிகண பதியே. (கச)

கற்பனைக் கற்றுங் கடபட மெனவீண்
கதைவிரித் துளறுமிக் கடையே
னிற்பெறு நிலையி னிலத்தறி வுருவாய்
நிகழுமா றென்றெனக் கருள்வாய்
சிற்பரஞ் சோதிப் பிழம்பெனும் வடிவாற்
செகத்தினைத் துலக்குமெய்ஞ் ஞான
நற்பரம் பொருளே யடியரி னுளத்தில்
நனிநடம் புரிகண பதியே. (௧௫)

வானது பிறங்கு மதிச்சடை சுமந்த
மத்தக வெழிலுமுக் கண்ணுந்
தேனுகு தெரிய லணிகளைக் களமுந்
திறனுறுங் கரங்களோ ரைந்துங்
காலுறுங் கழல்க ளணிமலர்ப் பதமுங்
கடையனே னுளம்பெற வருள்வாய்
நானது விதுவென் றிலவுறு தலத்தே
நனிநடம் புரிகண பதியே. (௧௬)

நானெனுஞ் செருக்கை யறுத்தவர்க் குளது
நமதடி யெனவுரைத் திருப்பத்
தானதைப் பெருக்கு மதியிலாமூடத்
தமியனே னடையுமா றென்னே
மோனமார் துரியத் துள்ளொளி யாகி
முத்தொழிற் கருத்தனு மாகி
ஞானமாரறிஞர் தமதுள மகிழ
நனிநடம் புரிகண பதியே. (௧௭)

சந்ததங் காமக் கனலினு லுருகிச்
சருகென வுலருமெய் யெளியே
னந்தணின் கருணை நோக்கெனு மமுத
வாரியி லமிழுநா ளுளதோ
கந்தனைப் புறமே போகவிட் டெளிதாய்க்
கைலையிற் கனியினை யடைந்தே
நிந்தையில் மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
நிறைநடம் புரிகண பதியே. (௧௮)

காலனைக் கூவி யலையிடுங் கொடிய
கன்னிருர் தருசிறு கலைஞருந்
சாலையிற் புரளுந் திரளுமுஞ் சமமாய்த்
தானுறச் செய்தவர் வெறுப்பென்
வேலவ னுறைக்கத் தினைப்புனக் குறமான்
வெருவுறக் கரியுரு வெடுத்தோய்
ஞாலத்துச் சிறந்த காஞ்சி யம்பதியில்
நனிநடம் புரிகண பதியே. (௧௯)

சதிசெயும் பொறிபாய் படையினைச் சயித்துச்
சாக்கிரமா தியா மாணி
னுதபறக் கடந்துங் கலைவுறு மனமா
மாசனைத் துரத்தியா னந்த
நிதிமிகு மொனது வடிவெனு மாசி
னில்லைபெற வனகடி யருள்வாய்
நதிமிகு காஞ்சி புரியதி லென்று
நனிநடம் புரிகண பதியே. (௨௦)

மிகவெளி தாகப் பெறுநதி யமுதம்
விடுத்தது கடினமாய் வரைமேல்
சிகியெழ வகழ்ந்து தனக்குறுந் தாகந்
தீர்த்திடுந் தகைமைமே லானையிட்
டகமிகு மனிய வமரரை வழிபட்
டழிவுறு துனைதரு டருவாய்
அகிமுடி மீதி லல்லுற வசைந்தே
யனிநடம் புரிகண பதியே. (௨௧)

மனமதி னிறைந்து வயங்குறு மணியை
மதியுற நிலைத்தறி யாது
கனைகடல் மலைகண் முதலவிண் டிரிந்து
கலங்குமெற் குனதருள் புரிவாய்
தினைக்கிளியடைய வெயினரி னுருவாய்ச்
சென்றமேவன் தனையனே யிமைக்குந்
தினமணி யெனவென் னகந்தையை யகற்றத்
திருநடம் புரிகண பதியே. (௨௨)

மாகதக் குயிலே மனநிறை யமுதே
 மதிநிகர் திருமுக மயிலே
யிரதமிகு மதாத் தவமென வளர்நி
 யிரிவுரு னதடி யருள்வாய்
காமை தொருமிக் கடைசுகக் கனமே
 கதியளி கருணையின் னலமே
பாவுறு மடியர் சயசய வெனவம்
 பரநடம் புரிகண பதியே. (உ௩)

பனைமர நிழற்கீழ் பாலினைப் பருகும்
 பரிசுபோற் சுகமுறு மறிஞர்
கனையலங் கழற்றி யுலகினி லழுந்திற்
 கருணையி னுளத்கமோ கழலுய்
தனையனை வருக்கு மளித்திட மிகுந்த
 தயவுடை யறிஞா துளத்தே
யனையென வெழுந்தங் கணிகழ லசைத்தே
 யணிநடம் புரிகண பதியே. (உ௪)

உலகதி லிலகும் பொருளெலா மநித்த
 மெனவுணர்ந் தொழித்தபின் னறிஞன்
விலகுறு மதனி னசைபுரிந் தலைந்து
 விடுவனோ வெனக்கருள் புரிவாய்
பலமுறை பயின்ற பழக்கத்தின் வயத்தர்
 பற்றினு னுனதடி பணியார்
கலகல வெனநற் கழலிசை கலிக்கக்
 களிநடம் புரிகண பதியே. (உ௫)

செந்தழல் மதியோ டருணனின் வடிவாய்த்
 திகழுமுக் கண்ணுமைங் கரமுஞ்
சிந்தூர வதனப் பொலிவுமென் னுளத்தே
 சிந்தனை செய்யுமா றருள்வாய்
கந்தமார் களபச் சாந்தும்பொற் றொடைகள்
 கவின்பெற மேனிமீ தணிந்து
நந்தலில் மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
 நவிநடம் புரிகண பதியே. (உ௬)

அகந்தையு மமதை யகற்றிய வடிய
ரடையுநின் றிருவடி மலரை
யகந்தகேயொ வடிவ மாய வெளியே
வழிவுறுங் காலமென் றருள்வாய்
தருக்கரு மௌனமத் தளவொலி கிளம்பத்
தாளமு மறையது சரிக்க
யிருந்திரு மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
மிளிர்நடம் புரிகண பதியே. (௨௭)

உண்பதற் குணவு முடிப்பதற் காடை
யுதவநீ பொருப்ப மில்லாக்
கண்புதைத் தனத்தி னசையினாற் கயவர்
கடைமனை தோறுங்கை கட்டிப்
பண்படு நகையைக் காட்டிக்கண் ணிரங்கும்
பரிதவிப் பொழியுமா றருளாய்
நண்புறு மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
நனிநடம் புரிகண பதியே. (௨௮)

வாதமே முதல வளருமெய்த் தூம்பில்
மலிசெயுங் கருத்தினை யொழித்தே
நாதமே முதல கடந்தொளி ருனது
நாண்மலர்ப் பாதமென் றடைவேன்
வேதமே முதலே லின்முதற் பூதம்
விளங்குதற் கேதுவாம் பரப்பே
ஞாதமே யெனச்சொல் லடைவிலா வடிவால்
நனிநடம் புரிகண பதியே. (௨௯)

பிறங்கிடு மிரவி வருமுன மெழுந்து
பெருந்துறு நதியினிற் படிந்தே
நிறக்கிள ரலர்கொய் துனதிரு சரணில்
நேயமோ டணியுமா றருள்வாய்
மறுவிலாச் சனக னாதித்தீஞ் சுவையின்
வருமடி யவர்திறம் வளர்ப்பான்
அறந்தரு தாரவை யுண்டுகன் னளித்தே
யருணடம் புரிகண பதியே. (௩௦)

தன்னுயிர் போல மன்னுயிர்க் கிரங்குந்
தகையுடை யடியவர் தொகையில்
மன்னுற விருந்த வறிவெனு முருவா
மயலினன் வாழுநா ளுளதோ
நின்னுடை யடியர்க் கடியனுந் திறனில்
நிலைக்குமா றென்றெனக் கருள்வாய்
நன்னெறி மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
நனிநடம் புரிகண பதியே. (௧௧)

தடித்தெனும் வாழ்க்கை நலத்தினி லிருந்துஞ்
சக்கரச் சுழற்சிநேர் நினைவாற்
பொடித்தென தறிவை நடித்திடு மனத்தின்
போக்கறுத் துனதடி மலர்த்தேன்
குடித்திடு மாந்திக் குரம்பைக்கூத் தகன்று
கூத்தனு மென்றகங் குளிர்வேன்
நடித்திடுந் தொழிலோ னகங்குழை தரவே
நனிநடம் புரிகண பதியே. (௧௨)

கருங்கடா மீதி லிவர்ந்துயிர் கவருங்
காலனார் தமக்குளங் கலங்கி
யருங்கழ லணியுன் றிருவடி யொன்றே
யபயமென் றடையெனக் கருள்வாய்
மருங்குலி தன்று மின்னெனு மிடையார்
மாபுவி மகளெனு மிருவர்
தருங்கல வியினுண் மகிழரி மருக
தனிநடம் புரிகண பதியே. (௧௩)

முப்புரி நூலு நுதற்கணு மதியு
முடிக்கணி பணிகளி னழகுந்
துப்புறு துதிக்கை தனையுநான் காணத்
தோன்றிநீ யென்றருள் புரிவாய்
தப்பறக் குலிசன் முதலவிண் ணவர்க
டவமிழைத் தளவிலா வரங்க
ளொப்பற வடைந்தங் குலவுகாஞ் சியினி
லொளிர்நடம் புரிகண பதியே. (௧௪)

காய்நரி கவருஞ் சதைத்திர ளதனை
கனிணமாய் மேருவாய் நவின்று
மாய்வுறு வழியி லழிவுறு துணைது
மாபுகழ் பாடிமா றருள்வாய்
சாய்கனி சருகு மருந்தென வருந்திக்
கடுமழை பனிவெயில் பொறுத்து
மாய்வறு யோகி மனத்தினை யகலா
மணிநடம் புரிகண பதியே. (௧௫)

உண்பதே யுண்டு முடுப்பதே யுடுத்து
முரைக்குநாற் சுகமென வுரைத்தும்
பண்பதே யாது மில்லதோ ரெட்டிப்
பலமெனத் திரிந்தனைப் பணியேன்
மண்புன லனல்கால் கம்மதி பரிதி
மகனெனு முருவமெய் யடியார்
தண்புனல் முதல வாட்டியஞ் சலிக்கத்
தனிநடம் புரிகண பதியே. (௧௬)

கருணையில் கடுநேர் வன்கணூர் தமது
காயமா மிறைச்சியைப் பெருக்க
வருண்மிரு முயிரைக் கொலைசெய்வார் காணா
யந்தகற் கென்சொலி யகல்வார்
தெருணனி யிலகுஞ் சைவத்தி னியல்புந்
தெளிவுறும் வைணவத் திறமு
மருளற வோங்கு காஞ்சியம் பதியில்
மணிநடம் புரிகண பதியே. (௧௭)

அரைக்கண நாநா விதமுறு வளங்க
ளம்பர மாந்திரை யெழுதிக்
கரைந்தள மதிக வியப்புறுஞ் சிறுவன்.
கழலிணை காணுமா றென்றோ
வரைச்சுவ டியின்மீ தொருமருப் பொடித்து
வயங்குமா பாரதம் வரைந்தோய்
திரையென மறைக்கு மிருண்மல மகற்றத்
திருநடம் புரிகண பதியே. (௧௮)

வெட்டெனப் பேசி யிழிக்துரைத் தடித்து
வெருவரப் புரிபவ ரிடத்தும்
பெட்புறத் துதிசெய் யருச்சக ரிடத்தும்
பெருஞ்சம மடையுநா ளென்றோ
மட்டிலா வளங்க ளுறும்பெரு வடிவை
வரேணிய னுக்கரு ளதனால்
தட்டற வருளிக் காஞ்சியம் பதியில்
தனிநடம் புரிகண பதியே. (௩௯)

நன்றுநன் றெனத்தம் விடயத்தி லழுந்து
நலமிலாப் பொறிகளி னசையின்
கன்றுநின் றிடாதென் னுளத்தினி லுனது
கழலிணை கருதுமா றருள்வாய்
மன்றுளான் மகனே மதியெரி பரிதி
வடிவுறு முக்கணு வளங்கள்
பொன்றலில் மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
புகழ்நடம் புரிகண பதியே. (௪௰)

சொப்பன மெனவென் னுறுதலா லுலகிற்
றொடங்குமோர் காரியத் தடையாய்த்
தப்பது புரிவோர் தங்களை முனியாத்
தன்மையே தமியனுக் கருள்வாய்
முப்புர மெரித்த முக்கண னருளு
முத்தமிழ்க் குருகுறு முனிவா
தப்பறு வழியி னடத்தி நற்பயனைத்
தாநடம் புரிகண பதியே. (௪௧)

மின்னலை நிகர்த்த வாழ்க்கையின் னலமே
விரும்பிமா தர்களது விழியாம்
இன்னல்செய் வலையி லகப்படா தெனது
இசைநடங் காணுமா றருள்வாய்
கன்னலைப் பழித்துக் கங்கையை யிழித்துக்
கதியளி வேகமா நதிசூழ்
நன்னிலை மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
நனிநடம் புரிகண பதியே. (௪௨)

வந்தனைக் குரிய நினதடி யார்கள்
மருவுறு சபையினி லென்னுஞ்
சந்தத மிருந்தி யுனதிரு கடைக்கண்
டண்ணளி செய்யுநா ளென்றோ
கந்தமார் கமலப் போதுகண் மலிந்த
கயங்கள்சூழ் காஞ்சியம் பதியில்
சிந்தையில் மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
சிறைநடம் புரிகண பதியே. (சரு)

கன்னலைத் தினவுங் கூவிவீ வருமேபோற்
கதிபெறு நினதடி யவரின்
இன்னலை யறுத்துச் சோறுநீ ராதி
யீந்தருள் புரியுமாண் டவனை
மன்னுறு நினது கருணையின் திறத்தை
மறக்கவுங் கூடுமோ மதின்மேற்
பன்னெடுங் கொடிக ளலையுங்கச் சியினில்
பரநடம் புரிகண பதியே. (சச)

மட்டிலா நோய்க டமக்கிட மாகி
வருந்திடுங் கூம்பையை யெனதென்
கெட்டெண மதனை யகற்றியென் றலைமேல்
கெழுமணிக் கழல்கள்வைத் தருள்வாய்
கட்டறும் விஞ்சைப் பெரியவ டனையின்
காத்திறற் கைலைசேர்த் தருளிச்
சிட்டர்க ளுறையுங் காஞ்சியம் பதியிற்
றிருநடம் புரிகண பதியே. (சரு)

சிந்துரச் செவியுங் கருணைமுக் கண்ணுந்
திகழுறு கயமுகத் தெழிலும்
மைந்துறு புயங்க ளைந்துமென் மனத்தே
வைத்துனைப் பணியுமா றருள்வாய்
கந்தங்க டமைத்தம் விடயத்திற் செலாது
கனைந்தவர் கருத்தெழுங் களிப்பே
மந்திர மாத்தூர்ச் சாமிதம் மடத்தில்
மணிநடம் புரிகண பதியே. (சசு)

தவமுநற் கொடையும் புலன்வயப் பொறியைத்
தன்வயப் படுத்தலு மான
பவமறு குணங்க ளொன்றுமில் லடியேன்
பயனற வகங்கரிக் கின்றேன்
நவமிகு முனது திருவடி மலரை
நலனுற வெனதுளத் தமைத்தே
அவமற வெனது வடிவினை யறிய
வருணடம் புரிகண பதியே. (சஎ)

அறுசுவை யடிசி லிச்சைவைத் தழலா
ரரக்கென மிகமிக வுருகி
யிறுநல மகளிர் தமைநினை பழுது
மிழிவுநல் லறமிலா வியல்பும்
பெறுமவர் தொகுதி யகன்றுன தடியைப்
பெற்றுய நாளெனக் கருளாய்
நறுமல ரறுகாற் றனைவழி படவே
நனிநடம் புரிகண பதியே. (சஅ)

பந்தவே ரறுக்கும் பரமனே யுனது
பதமலர்த் தினமணி யெனது
சிந்தையே குடியாக் கொண்டக விருளின்
செருக்கெலா மகற்றுமா றருள்வாய்
குந்தமார் கையாற் சூரவரோ டெதிர்ந்த
குமரவேள் தமையனே கொடுங்கோற்
சிந்துரன் றன்னைப் பொடித்தரு ளியநற்
றிருநடம் புரிகண பதியே. (சகூ)

மறைதனி லறையு நீதியொன் றேனு
மனமுற வனுசரிக் காது
பறையென வாயா லறைதலே யென்றும்
பழகுறு மதியின னினது
கறையறு மௌபநிஷதநல் வடிவைக்
கண்டுள மகிழுநா ளெதோ
திறையெனக் கசங்கள் பெறுகரு ணையனே
திருநடம் புரிகண பதியே. (௫0)

உலகினை யெளியர்க் குதவிடுந் தான
மொப்பறும் பெரிதென வுணர்ந்தார்
கலைநிறை யில்லா வெளியனு மெனக்குன்
னருள்கொடுத் துதவிடி னலமாம்
வலம்புரி வென்டா மரைமிசைக் கிடக்கும்
வாவிசூழ் காஞ்சியம் பதியில்
நிலவுறு மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
நிறைநடம் புரிகண பதியே. (௫௧)

அந்தா மகவிற் சந்திர னுடைக்க
ளருணனு தியர்களை யழகாய்ச்
சந்திசெய் தலக நடனசா லையின்மேற்
றனிநடஞ் செய்வர்யா ருனையாய்
சந்தத மமலத் தனைதிரு சரணைத் தாழ்ந்திடு
மடியவர்க் கன்னைபோல்
வந்தருள் புரிவாய் காஞ்சியம் பதியில்
வரநடம் புரிகண பதியே. (௫௨)

எரிசுடு காட்டிற் கழுகுநாய் நரிக
ளிச்சையுற் றிழுக்குந் தீ யிறைச்சிப்
பெருங்கொடு மகவிர் தமையென்று நினையாப்
பெருந்தவத் துணிவெனக் கருள்வாய்
கருநிற யமுனை நிறத்தினைக் கடந்த
கரியமா லின்மரு கோனே
அருமறை யகத்தி லொளிரறி வுருவ
வருணடம் புரிகண பதியே. (௫௩)

எங்குமே தனது வொளியினைப் பரப்பி
யிருஞ்சரா சரமதை யொளிர்க்கும்
பொங்குசூ ரியனு யிலகவு முலூகம்
போலிருந் துனையறி கில்லேன்
பங்கினை யுமையா டனக்களித் திடுநற்
பரமனுக் குதவிசெய் தவனே
மங்குத லின்றிக் காஞ்சியம் பதியில்
மணிநடம் புரிகண பதியே. (௫௪)

காமமே முதலாம் பதினொரு குணங்கள்
கலக்குறக் கலங்குறு மெளியேன்
சாமள வுததி தனினல்லையில்லாத்
தன்மைபோ லென்றமர்ந் திடுவேன்
கோமளத் துதிக்கை தனினறுந் தார்வை
கொண்டடி யவர்க்கருள் கோனே
தூமநல் லியாக நிறையுங்கச் சியினிற்
றுநிநடம் புரிகண பதியே. (௫௫)

செகத்துளோர் தமக்குக் காட்சிபோற் படர்ந்த
செந்துகி லுடுத்திவெண் ணீறு
மிகுத்துடம் பணிந்து வயிறுசான் வளர்க்கும்
வேலையை யொழியென விதித்து
அகத்துறு நசையை யறுத்தெறிந் துனதின்
னடியிணை பணியுமா றருள்வாய்
மகத்தினி லடியர் வழுத்துற வருளு
மணிநடம் புரிகண பதியே. (௫௬)

தோலொடு குருதி சதைமுத லியவாந்
தொடக்கினை யானென்ப தகற்றிப்
பாலொடு நீரைப் பகுத்திடு மனம்போற்
பாநிலை கண்டெந்நா ளமர்வேன்
வேலொடு மயின்மீ தேறிநின் றுலவும்
வேலவ னழைத்தவா ரணமே
சீலமார் மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
திருநடம் புரிகண பதியே. (௫௭)

கருமத்தின் பயனு லெய்துபோ கமதைக்
கருதிகாண் முழுவதுங் கழித்தால்
தருமத்தி னுருவாய் வெளிவரு நினது
தண்ணடி சாருநா ளென்றோ
கருமத்தி நிறத்தன் கண்ணினு ரின்பங்
கடையெனக் கண்டவ ருளத்தே
வருமத்தி முகத்தோ டெழுநதருள் புரிய
வரநடம் புரிகண பதியே. (௫௮)

காரிய மீதிற் கண்செயு மவர்க்குக்
கடுந்துற விருக்குமோ வன்பில்
நாரிக டமக்குக் கொழுநன்மை யென்று
நல்லெனை யிருக்குமோ நவிலாய்
வாரியென் றுரைக்க மும்மதம் பெருக்கி
வளர்க்கிகுளிர் வாரணா வுருவ
காரியங் கண்ட னெனுஞ்சிவன் புதல்வ
கவிநடம் புரிகண பதியே. (௫௯)

பற்றறு மீசைப் பாரிலுற டுதல்போல்
படித்தவ னெனிலுமா மோகந்
தெற்றென விளங்கா வகைதனை துருவஞ்
செய்திடு கின்றதே தருள்வாய்
கற்பவிந் தனைநு கழலிணை பரவுங்
கவிகளை யாளச் சுகக் கனமே
குற்றமொன் றில்லா வமலர்கள் மகிழ்வு
கொளநடம் புரிகணபதியே. (௬௦)

தோன்றுறு முலக விடயங்கள் சுகமாய்த்
தோன்றிப்பின் துக்கமே தொடருங்
கான்றசோ றதனிற் கண்டிவை முழுதுங்
கடந்துனைக் கண்டவன் கண்டான்
வான்றொடை யலர்ந்து வயங்குறற் றேளாய்
வளமிகு கவிஞர்க டொகைக
டான்றனி வதியுங் காஞ்சியம் பதியிற்
றனிநடம் புரிகண பதியே. (௬௧)

ஒருதினை முனைவை யொழித்திடிற் றேக
முலர்ந்திடுஞ் சருகினு மிகவே
கருதிநல் லனிலஞ் சருகிவை புசித்துக்
கடுந்தவம் புரிவது மெளிதோ
கருவழி யடையா வழியெனக் கெளிதாய்க்
கருத்தினி லெழுக்கழல் தருவாய்
ஒருவரை யளித்த பிடிதரு களிறே
யொளிர்நடம் புரிகண பதியே. (௬௨)

தந்தையுந் தாயுஞ் சுற்றமும் விட்டுத்
தனியனு யிருக்குமென் றனக்கு
நிந்தையி லடியர் தமக்கரு ணிமல
நீயலாற் றுணைபிறி துளதோ
வெந்தெழுங் காம நோயினுக் கரிதாய்
விரிந்தெழுஞ் சோதியே விமலர்
சந்ததம் வழுத்துங் காஞ்சியம் பதியிற்
றனிநடம் புரிகண பதியே. (௬௩)

காமமே முதலாங் கடுவெயிற் கொளுத்தக்
காய்ந்திடும் பாலையாம் பவத்தில்
வேமுயிர் களுக்குச் சுகநிலை தாமேவ்
விளங்கிடுங் கற்பக வருவோய்
வாமநல் லடியர் தொடுத்திடுந் தமிழ்ச்சொல்
வளமிகு மலர்மணம் பெருகுந்
தாமமென் றோளி லசைந்திடத் தினமுந்
தனிநடம் புரிகண பதியே. (௬௪)

விடத்தினுங் கொடிய கருங்கணார் தமையே
விழைபவர்க் கவர்கட யுதரக்
கடத்தினுள் பிறவி கொடுத்தருள் புரியுங்
கருத்தினு லவாவர் நினைவின்
படிக்கருள் சிந்தா மணியென நினைந்தேன்
பதங்கொடுத் தெனையருள் புரிவாய்
மடத்தினுள் வளங்கள் கொடுத்தருள் புரிய
மணிநடம் புரிகண பதியே. (௬௫)

மூவுல கதனி லுறைமக ளிர்தமை
முன்னவ ளெனவந்தா யெனவும்
பாவனை செய்ய நினைநினை யெனக்குப்
பரமனே கருணைசெய் தருள்வாய்
தேவர்க ளுரகர் சித்தர் காந்தருவர்
செயசெய வெனவுனைப் பணிய
மேவுறு முழங்க நிறையுநகர் சிவினில்
மினிர்நடம் புரிகண பதியே. (௬௬)

பந்தவே ரறுக்கு மருளினா ருனது
பதமிதம் பணியுநற் றவத்தோர்
வெந்துய ரகற்றுங் குழுவினி லெனையு
மேவுமா றருள்புரிந் திடுவாய்
நந்தலில் வளங்க டமையடை தேவர்
நலனுற வடைந்தது பலிக்கப்
பந்தமில் பூதி யணிபவன் சுதனே
பரநடம் புரிகண பதியே. (௬எ)

உருசிகள் வேறாச் சாரமொன் றுரு
முண்மைபோ லறிஞர துளத்தே
தெருளுரு வாக விளங்குவ தெனக்குத்
தெளிவுற விளங்குமா றருள்வாய்
முருகெழு மலர்கொண் டளியுடன் பணிந்தால்
முதலெலாம் பதமுத வமலா
அருகலில் காஞ்சி புரியதிற் றினமு
மருணடம் புரிகண பதியே. (௬அ)

ஆசையோர் விஷத்தின் வகையதா முலகுக்
கறிந்தமா வீர்க ளதனைத்
தேசுறு கோட திருட்டியென் மருந்தைத்
தெளிவுற வுண்டுநீக் குவரால்
பாசம தகற்ற வலிமையி லெளியேன்
பதமல ரணையுமா றென்றோ
வீசுமென் றென்ற லுலவுகாஞ் சியினில்
விரிநடம் புரிகண பதியே. (௬௯)

காரண மிறந்து கருத்தொடு மொழியின்
கதியொழிந் தானந்த வடிவாம்
பூரண நிலையிற் பொருந்துற வுனது
பொன்னடி சூட்டுநா ளென்றோ
வாரண முகத்தோய் வஞ்சமி லன்பர்
மனக்கறு மணமணி விளக்கே
காரணற் கினிய மருகனே யருள
கனிநடம் புரிகண பதியே. (௭௦)

தப்பறு யோகி நெறியினின் மருக்கைத்
தகைதரு நிசயமுற மனத்தைத்
துப்புற நிறுவி யிருவிழி தனினீர்த்
துளிமிக மிருகவ னமதாய்
எப்பொரு ளதனி லிலத்திரு மாந்தங்
கிருப்பமின் றவதையெனக் கருள்வாய்
ஒப்பறு மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
யொளிர்நடம் புரிகண பதியே. (௭௧)

கண்ணுறு மிடங்க ளனைத்துமெய் யறிவாய்க்
கண்டமர்ந் தகடித கடித
நண்ணுறு மாயா விகற்பங்க ளகன்று
நலம்பெற வாழுமா றருள்வாய்
பண்ணுறு மறைகள் கடலென முழங்கிப்
பாவுநற் பதமெனும் பரம
விண்ணுரு வுடைய விறைவமெஞ் ஞான
விரிநடம் புரிகண பதியே. (௭௨)

மானச மாக மல்லிகைத் தவிசும்
வளங்களும் பலபல வியற்றித்
தானதில் ரமித்துக் காலம்வீ ணாக்கிச்
சலித்தவெற் குனதருள் தருவாய்
வானவர் கோடியின் வழிதனி லிறங்கி
வளம்பெற வருங்கச்சி தனிலாய்
யானஞ்சூழ் மாத்தூர்ச் சாமிதம் மடத்தே
யணிநடம் புரிகண பதியே. (௭௩)

உருக்கிய தங்கந் தாவொளி ருபவி
தங்கிடந் தொளிர்தல்நின் றனுவில்
பெருக்கிய செக்கர் தனிலொளிர் மின்னின்
பெற்றியைத் தொடருகின் றதகோ
தருக்கியே யெதிர்த்த சிந்துரன் செருக்கைத்
தவிர்த்தருள் கருணைமா கடலே
இருக்குக ளேத்துங் காஞ்சியம் பதியி
லிசைநடம் புரிகண பதியே. (௭௪)

அருளுறு மடியார் தமதுள மெனுமோ
ரம்புயத் தொளிருமைம் முகனை
தெருளுறுமங் கலைகள் பலபல வுணர்ந்து
தெளிந்தவர் பெறும்பெருந் தெளிவே
மருளறுத் தெனையுன் றிருவடி மருவி
மனமுறும் பதமெனக் கருள்வாய்
கருளுறுங் காத்திரம் மிறையனை யென்றுங்
களிநடம் புரிசபா பதியே. (௭௫)

பகிர்முக மாகமனத் தினைப் பழக்கிப்
பதம்பெற விறைதனைத் திசைமேய
வெருவரு தமுட னடங்குறாக் கங்கை
மேவிட நினைதலொத் தருமேய
அகிமுடிக் கனிந்தேயங்குச பாச
மழுகுறக் காத்தினிற் றங்கித்
தருங்கரு மெனுநற் சதிக்கிசைத் தென்றுந்
தனிநடம் புரிசபா பதியே. (௭௬)

தேவரு மனுடர் மிருகமே முதலாஞ்
செகத்தெலா மெனதுரு வெனவே
பாவனை வளர வைங்கர னுருவாய்ப்
பரிவுட னெழுந்துவந் தனையே
மூவரு மெளிதி லடைவுறப் பதத்தே
முநிர்க்கெழு முக்கணு வமலர்
மேவிடு காஞ்சிப் பதிதனி லென்று
மிளிர்நடம் புரிசபா பதியே. (௭௭)

மோதகங் கடலை யவல்குள மிளநீர்
முருக்குநல் லதிரச மிவைகள்
ஆதர மேவுமுன் றனக்குயா னளிப்பே
னமலநீ யெழுந்தருள் புரிவாய்
தீதிலாப் புலவ னருளுநற் கவியின்
தீஞ்சுவை வயத்தனுக் தூது
பாதங்கள் சிவப்ப நடந்தவன் மகனை
பாநடம் புரிசபா பதியே. (௭௮)

மல்லிகைசுகந்த மயிலைமந் தாரம்
மதுமிகு முளரிசெங் கழுநீர்
முல்லைநல் லலரி முதலிய வலர்கள்
முடிக்கணிந் திடவெழுந் தருள்வாய்
வல்லவ ரான வசுரர்கள் புரத்தை
மகிழ்வுறு நகையினு லெரித்த
தில்லையோன் மகனே யமலர்கள் துதிக்கத்
திருநடம் புரிகண பதியே. (எசு)

பலவித மாக வுரைப்பினு மதத்தர்
பகைப்புறு முளமதை யறிவில்
சலனம தறவே நிறுவிநின் கழலைச்
சந்தத நினைக்குமா றருளவாய்
கலகல வெனுநற் கழலணி கழலாய்
கவின்பெறலி காஞ்சிபம் பதியி
லிலகுறு மாத்தூர்ச் சாமிநம் மடத்தே
யிசைநடம் புரிகண பதியே. (அ0)

தயங்கிடு மிரவி யுதித்திடி னிருளின்
றன்மையென் னுஞ்சுக நிலையாம்
நயந்தரு முனது திருவரு ளுதித்தால்
நவைசெய்யிவ் வவித்தையென் னுமே
மயங்கிடும் விசயன் றனக்கொரு கணத்தே
மனத்தெளி வருள்பவன் மருகா
புயங்களை வீசி யருண்மழை பொழியப்
புகழ்நடம் புரிகண பதியே. (அக)

சிருட்டியே முதலா மைந்தொழி லுனது
திருச்செய லேயெனத் தெளிவாய்த்
தெருளுறு மறிஞ ருரைத்தலாற் சிறியேன்
செப்புவ துனக்கினி யென்னே
பருவம துடைய வமலர்கள் மலத்தைத்
பரிதிபோன் றொழித்தருள் புரிவோய்
தருமநற் காஞ்சிப் பதியினிற் றினமுந்
தனிநடம் புரிகண பதியே. (அஉ)

அனந்தமாம் பெரிய வுருவென துளக்கீத
யமுகுற நிறுவியுன் றனது
கனந்தரு கழல்க ளனுதினம் பணியக்
கடையனுக் குதவிசெய் திலையே
வனந்தரு மலர்க ளிலையொடு முன்னையே
வணங்குநர்க் கழிவிலா வரிய
மனந்தரு மோக்க வழிவினை யருள
மனிநடம் புரிகண பதியே. (௮௩)

காஞ்சிரங் காய்தன் கசப்பினை விடுமோ
கயவர்கள் களைக்கிலா நூல்க
ளாய்ந்தபின் ருமுந் தமதுதுற் செய்கை
யகல்வரோ வெனக்கருள் புரிவாய்
தீஞ்சுவை வகைகொண் டுனதருஞ் செயல்க
டெரிந்திடா தழைந்தநற் றனதற்
காஞ்செறி மபக்க மகன்றிட வொலிக்கு
மனிநடம் புரிகண பதியே. (௮௪)

சத்துவம் ரஜசு தமசெனுங் குணங்க
டங்களை யடுக்குமா னிடரைச்
சுத்தனே பலவாந் தொழில்களி லேவுஞ்
சூழ்ச்சியை யென்றெனக் கருள்வாய்
அத்தனே தில்லை யம்பல வாண
னகங்களித் திடுமிளங் களிறே
நித்தனே யமலர் நினைவினி லிலகும்
நிறைநடம் புரிகண பதியே. (௮௫)

அற்பர்க ளெடுக்குங் காரியஞ் சிறிதே
யாயினு முயல்வதி கமதாம்
பொற்புற வெடுக்குங் கிரியையிற் பெரியோர்
பொருந்துறு துளமகிழ்ந் திருந்தார்
அற்புதம் விளங்கத் தினமணி யெனவென்
னகத்துதித் தருளுநா ளென்றோ
நிற்பெறு மாத்தூர்ச் சாமிதம் மடத்தி
னிறைநடம் புரிகண பதியே. (௮௬)

கர்க்கமே முதல வாகநூற் பழகிச்
சளசள வெனவுள றியேசம்
பர்க்கமே விடய மதனிடத் தகற்றுப்
பாவியுஞ் சுகவடி வெனப
வர்க்கமே யடைந்தா னந்தமாம் பெரிய
வாரியி லமிழுநா ளுளதோ
கர்க்கச மனத்தோ ரறிவதற் கரிய
களிநடம் புரிகன பதியே. (அஎ)

மோதா பிளந்த தெனவொளி ரகமு
மெத்லைகயுஞ் சுதர்களு மனிதர்
காருறுங் கன்னி தனையுமிங் ககன்று
காலனு ருலகமே னடைந்தார்
பேருரு மூலம் பலவடை நதிகள்
பெருங்கட லடையும்பெற் றியெனப்
பாருறு மதத்த ரடைவுறும் பதியிற்
பாநடம் புரிகன பதியே. (அஅ)

மிகமிக வெரியு நசையெனு மனலை
மினிருநின் கழலெழு மருளால்
தகுசம னமேசெய் தறிவுரு வாகத்
தமியனே னுலவுநா ளுளதோ
இகல்தரு நசையை இறையுந்த முளத்தி
லிருத்திடா தகற்றுமெய் யடியார்
நருமக மிடமாய் வளர்ந்திடு பெரும
னனிநடம் புரிகன பதியே. (அகூ)

குணநலங் கல்வி குறைவிலாத் துறவுங்
கோதிலார் கூட்டுமெற் கருளி
மணமிகு ஞான மலர்கொடிங் குனையே
வழிபட வழியெனக் கருள்வாய்
பணிவயி றதன்மே லகிபணி யொளிரப்
பாப்பிடச் செக்கர்போன் றிலகக்
கணம்பெறு மசுரர் சுரர்நரர் பரவக்
களிநடம் புரிகன பதியே. (கூ0)

தன்னிடத் திருக்குங் கசடினை யுணராத்
தன்மையாற் பிறரிடத் திருக்கு
மன்றகற் குணங்கள் குறித்தனை நினைந்து
மதத்தினு ளுயர்ந்திருக் கின்றேன்
பன்னிய சடையி லிலங்கிடும் பகரிலின்
பாளைநுங் மிகமிக வெரியும்
வன்னியங் கன்னை வளமிகு காஞ்சி
வைநடம் புரிகண பதியே. (௬௧)

குணநல முடைய சுசனருக் களித்த
கொடையொரு பலவிரு மதிகம்
பணமிகர் கொடியர்க் களித்திடு முதவி
பலித்தளி திகழென நினைத்தேன்
கணமுன தடியி லசைவற நிலைக்கக்
கடையனுக் குதவிசெய் திலையே
குணமிகு மடியர் தமதுள மகிழ்வு
கொளநடம் புரிகண பதியே. (௬௨)

அழுக்குறும் பாண்ட மதனினி கூட்ட
பலந்திடுந் தனைகளைப்போற் கசட
மிழுக்குற உலக மதனில்வி னாலைந்திங்
கிருப்பதே யெனக்கருள் புரிவாய்
விழுங்கித்தன் னுதரத் திட்படைப் பாதி
விரிந்தசரு தியர்க்குணர்த் தியநற்
கழல்களிற் கழல்க ளிசைதரத் தினமுங்
களிநடம் புரிகண பதியே. (௬௩)

சாத்திரக் கடையை விரித்தொழி யாது
சற்குரு தனதிரு சரணை
பாத்திர மெனயான் நம்பினல் விடு
பலித்திடா திருத்தமே பகராய்
தோத்திரத் தோடு தோத்திரிப் பவனும்
அகத்திரி கற்பொரு வாழ்வுறப்
காத்திர மியக்குஞ் சூத்திர வுருவ
களிநடம் புரிகண பதியே. (௬௪)

சந்திரன் றுரை மீதுமோ கத்தாற்
றனதுடல் க்ஷயத்தினை யடைந்தான்
வெந்துயர் தருமிந் நசையினைப் பெருக்கி
வெறுத்தன ருனதடி. சிறியர்
சிந்தா வதனைப் பொலிவுமின் னருளுஞ்
சிந்தனை செய்யுமா றருள்வாய்
நந்தலில் மாதர் தூர்ச் சாமிதம் மடத்தில்
நனிநடம் புரிகண பதியே. (கரு)

சூரிய னுடுக்கள் முதலிய பொருள்க
டோன்றியு மிவைகடம் மூல
காரக னுனதிரு சரணைக்
கருத்தினி லிருத்திடா தலைந்தேன்
வாரியே கருணை வள்ளலே யன்பர்
மதியினி லெழுமுழு மதியே
தாரினிற் சுரும்ப ரொலித்திட வசைந்து
தனிநடம் புரிகண பதியே. (கசு)

வெயிலினிற் களைப்புற் றருநிழ றேடி
வெந்தெழும் பாலையை மேவித்
துயில்செயு மவன்போ லனைமுத லோரைத்
துறந்துமிவ் வுலகவா டல்களிற்
பயிலல்செய் வீணான் சுகமிலை யதனிற்
பதைப்பற விருக்குமா றுளதோ
அயில்கொளு முருகன் றனைச்சயித் தென்று
மணிநடம் புரிகண பதியே. (கஎ)

வனத்திலுங் கொடிய குகையிலுமிருந்து
மருத்தினை யடக்கினேன் ஞானம்
மனத்திலு முதய மானதிங் கினியான்
மாறுறு ஞானியா யினனே
யெனவெறும் வாயா லுளறிநாள்கழிக்கா
தென்றுன திணையடி யடைவேன்
தினமணி யெனவென் னகந்தையை யகற்றத்
திருநடம் புரிகண பதியே. (கஅ)

கொடுமையில் வடவை யெனுமகள் கொழுநற்
கூற்றவ னன்றியெவரில்லையே
தழுத்தனை மனமே யுலகினர்க் கியன்ற
சத்குரு வலதுமோ ரில்லையே
படருல கதனி லுனதலங் குறித்துப்
பரதத்தெழு மதியினைச் சயிக்கத்
திடமெனக் கருள்வா யருண்முகத் தெளிவே
திருநடம் புரிகண பதியே. (௯௯)

இவ்வுல கதனி லடைசுக மினையா
மிதிற்றுன்ப மளவில தாகு
மவ்வகை யிருந்துஞ் சுகமிகு முன்ற
னடியிணை பரவுறு தலங்கேன்
எவ்வமின் றுனது திருவரு ளடைந்த
வெழிற்சிவ ராமசா மியெனுங்
கவ்வையில் மாத்தூர்ச் சாமிதம் மடத்திற்
களிநடம் புரிகண பதியே. (௱)

மேன்மைய தான வொழுக்கசாத் தியமா
மெய்யருட் சுகமடை வதற்குக்
கான்மலர்க் கழலுன் னடியனு மெனக்குக்
கருணையா லுதவிவாழ் விப்பாய்
தேன்மழை துளிக்கு மொழிவிறற் குழலாள்
தேவிகா மாக்ஷியாஞ் சிவையோர்
பான்மரு வியநம் பரமனின் சுதனே
பாநடம் புரிகண பதியே. (௱க)

இலங்கு நடன கணபதியி
னிணைத்தாள் வாழி வேல்வாழி
நலஞ்சே ருமைகா மாக்ஷிதனின்
நளின பொற்பா தம்வாழி
சலஞ்சேர் சடையே கம்பன்றன்
சரணம் வாழி யின்பகலப்
பலஞ்சார் குரவன் பதம்வாழி
பரம னடியார் தாம்வாழி



உ

கணபதி துணை.

# ஸ்ரீ நடனகணபதி துதி பஞ்சகம்.

## காப்பு.

நன்னகராங் காஞ்சி நடன கணபதியின்
தன்னிகராந் தாளை சரணுதும்—என்றுதியின்
பஞ்சகத்திற் கன்பாற் பதமே யுதவுமொரு
கஞ்சக் கரக்களிறே காப்பு.

சீருலவுங் காஞ்சிநகர்ச் சிவகாமக்
கன்னியெனுந் தேவி பாக
னீருலவுஞ் சடாடவியே கம்பேசன்
செக்கரென நிறத்தோ னீன்ற
பாருலவு மன்மர்குழாம் பாடவதற்
கிசைந்துநடம் பயிலு மோனப்
பேருலவு மானந்த நடனகண
பதிதுணைத்தாள் பேணி வாழ்வாம்.

கண்டனவாக் கினியாள்வல் லடைகாமக்
கலவியிலே கலங்கத் தோய்ந்தும்
வண்டனப்பா வையாரின் மிதுனமிலா
விரத்தனென வழங்கப் பெற்றோன்
மண்டலத்தன் னடியார்க்கோர் வசதியெனு
மாத்தூரர் மடத்தே வாழுஞ்
செண்டனவின் நடனகண பதிதுணைத்தா
ளிக்கணமே சென்னி சேர்ப்பாம்.

பூதங்க ளைந்தொருநாற் கரணமுதற்
பொறிபுலன்கள் போக்கி யின
போதங்க ளைந்தொருக்கி மேகாந்தப்
பூமிதனிற் பொலியு மன்பர்
காதங்களைந்தது போற் கூரிய
மொருகொம்பைக் கையி லேந்தி



மாதங்க முகமாத்தூர்ச் சாமிபட
மேவினார் மன்னையாற்க.

அகந்தைவிடார் கண்டுகொள முனைந்தப்
பெம்மொனியை யடியார் தாம
வகந்தான்றன் மகிழிடமா யமர்செய்வாக்கைக்
காலத்திக மருமேக நீர்த்து
மகத்தாலெசய் மைவிசாயிய விளங்குமொரு
மாத்தூர் மடமே மேவிச்
சகந்தன்னை யாருமொரு நடனகண
பதிதன்னைச் சாருகிற்பாம்.

தன்னடியார் தன்மருகு கண்டுகளி
கொண்டவர் சாலபு சான்ற
மன்னுகின்ற மாத்தூர் மடமேவி
வாழ்ந்தருவா மியாமே யென்று
நன்னகத்தின் முகங்காட்டிக் கருணைபொழி
நயனமுமைங் கரமுங் காட்டி
இன்னிசைச்சேர் கழல்காட்டு நடனகண
பதிநிற்றா னென்னே யென்னே.

